Registered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 30—No. 4

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



மலர் 30 | ஹேவிளம்பி சித்திரை 1957 ஏப்ரல் | இதழ் 4

உள்ளுறை

| உள்ளுறை | பக்கம் |
| --- | --- |
| படைத்தல் ... | 97 |
| இயற்கையின் வளர்ச்சியும் இலக்கிய வளர்ச்சியும் ... | 101 |
| இன்றைய சமயப்பணி ... | 103 |
| சிவப்பிரகாசர் செய்யுள் நலம் ... | 106 |
| பாடி வழிபடுதல் ... | 113 |
| திருமுருகாற்றுப்படை—சைவ சித்தாந்த விளக்கமே ... | 116 |

பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.
உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், பி.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
2, சீதாராம நகர், கடலூர் N. T.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## செய்தித் திரட்டு

28-2-57 :—சிவராத்திரி : இராமநாதபுரம் அங்காளம்மன் கோயிலில் தீ மிதிக்கப்பட்டது. 10, 15 அன்பர்கள் ஆவேசத்தோடு நெருப்பு மிதித்தார்கள். இது நம்பிக்கையின் பேரில் ஏற்படுகிறது. உண்மையான கடவுள் அன்பு இருக்கிறதா ? சிவராத்திரிக்கும் அங்காளம்மன் தீ மிதிப்புக்கும் என்ன தொடர்பு ? சைவ நூலில் என்ன ஆதாரம் ?

1-3-57 :—பேரூரில் ஒரு பழைய தேரிலிருந்து மரச் சித்திரங்கள் பிரிக்கப்பட்டுக் காட்சியில் வைக்கப்பட்டன. இவைகளில் அழகிய புராணப் பிரதிமைகள் இருந்தன. ஆனல் அருவருப்பான சிற்றின்பப் பதுமைகளும் இருந்தன. இவைகள் என் வைக்கப்பட்டன? நூல் ஆதாரம் உண்டோ?

12-3-57 to 15-3-57 :—பேரூர்ப் பட்டீசர் பங்குனித் திருவிழா நான்கு நாள்களும் சைவப் பிரசங்கங்கள் நடந்தன. திருவாளர்கள் கி. வா. ஜகந்நாதன், பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், T. P. மீனுட்சிசுந்தரனர், G. சுப்பிரமணிய பிள்ளை ஆகியோர் அருமையாகப் பேசினர்கள். 16-3-57 பேரூர்ப் பங்குனி உத்திரதரிசனம் நடந்தது.

24-3-57 :—சட்டசபைத் தேர்தலில் வெற்றி பெற்றவர்களுக்குப் பாராட்டு தரப்பட்டது. முதல் முதலாக சைவப் புலவர் பெண்மணி வெற்றியடைந்தார். புலவர் குழந்தையம்மாள் தமிழ் ஆசிரியை ; சைவ சித்தாந்த சமாஜத் தொடர்பு உடையவர்; கோடை வகுப்பில் வித்தியாலயத்தில் மாணவியாகப் பயின்றவர் ; சித்தாந்தத்தில் தேர்ச்சி பெற்றவர். இவர் வெற்றிக்குப் பாராட்டுகிறேம்.

---

## திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி

திரு. ரா. சண்முகசுந்தரம் செட்டியார் எழுதிய உரையும், திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் எழுதிய அணிந்துரையும் கொண்டது. சமாஜப் பொன்விழா வெளியீடுகளுள் ஒன்ருகப் பதிப்பிக்கப்பெற்றது. 176 பக்கங் கொண்டது. விலை ரூபா ஒன்று, ரிஜிஸ்தர் தபாற்கூலி அணு ஒன்பது.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி சித்திரை 1957 ஏப்ரல் | இதழ் 4

## படைத்தல்

ஆசிரியர்

இறைவனுக்கு முத்தொழில் உண்டு என்று எல்லாச் சமயங்களும் கூறுகின்றன. அவை யாவன : ஆக்கல், அளித்தல், அழித்தல் என்பன. இவைகளோடு மறைத்தல், அருளல் என்ற இரண்டும் சேர்ந்து ஐந்தொழில் உண்டு என்று சித்தாந்தம் கூறும். இவைகளில் ஒவ்வொரு தொழிலையும் இயற்றும்பொழுது ஒவ்வொரு பெயரால் இறைவன் குறிக்கப்படுகிறன். ஆக்கல் நான்முகனலும், அளித்தல் திருமாலாலும், அழித்தல் உருத்திரனலும் இயற்றப்படும். இறைவனே இம்மூன்று மூர்த்திகளாகவும் தொழிற் படுகிறன் என்பது கருத்து.

இது நிற்க. ஆக்கல் அல்லது படைப்பு என்பது என்ன, அதனுடைய குணம் யாது என்பதைப் பற்றிப் பொது மக்கள் என்ன கருத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது கவனிக்கத்தக்க ஒரு செய்தி ஆகும். படித்தவனும் படியாதவனும் அறிவுள்ளவனும் அறியாதவனும் "இறைவன் என்னைப் படைத்தான், இறைவன் உலகைப் படைத்தான்" என்று கூறுகிறார்கள். இச் சொற்களால் அவர்கள் 'என்ன கருத்தை வெளியிடுகிறார்கள், நெஞ்சில் என்ன நினைக்கிறார்கள்' என்பதைச் சற்று ஆராய்வோம். "இறைவன் என்னைப் படைத்தான்" என்னை என்ற சொல் தன் உடல் மட்டும் அல்ல, உயிரையும் சேர்த்துக் கூறுகிறார்கள். உடல் ஒன்றுமட்டுமல்ல உயிரையும் இறைவன் படைத்தான்

என்றே சாதாரண மக்கள் எண்ணுகிறார்கள். இங்கே உயிர் என்றால் ஆன்மா என்றே கருதுகிறார்கள். உயிருள்ள உடலையும் ஆன்மாவையும் இறைவன் படைக்கிறான் என்பது பாமர மக்களின் கருத்து. இக்கருத்துக்கும் தங்கள் சமயநூற் கருத்துக்கும் வேறுபாடு உண்டு என்று அவர்களுக்குத் தெரியாது. இதைப் போலவே மற்ற சிற்றுயிர்களைப்பற்றிப் பேசும்போதும் அவைகளை இறைவன் படைத்தான் என்றால் உயிரையும் உடலையும் படைத்தான் என்றே கருதுவார்கள். இனி உலகைப் படைத்தான் என்றால் உலகில் உள்ள ஒவ்வொரு பொருளையும் அவ்வாறே உண்டு பண்ணினான் என்று நினைப்பார்கள். 'இறைவன் எல்லாம் வல்லவனாகையால் அவ்வாறு செய்ய வல்லவன் என்பது கருத்து. இது சரியா? சிறிது ஆராய்வோம்.

சைவர்களும் வைணவர்களும்கூட இவ்வாறே நினைக்கிறார்கள். இது மட்டுமா அத்துவைதிகளும் மற்ற வேதாந்திகளும் இவ்வாறே நினைக்கிறார்கள், பேசுகிறார்கள், இவர்கள் தங்கள் தங்கள் சமயக் கொள்கைகளை ஒரு சிறிதும் அறிந்து கொள்ளவில்லை, அறியமுயலவுமில்லை. பாமர மக்கள், படித்தவர்கள்கூட, ஆன்மா வேறு உடல் வேறு என்று எண்ணுவதே இல்லை. இறைவனே ஒவ்வொரு உயிரையும் உடலையும் உண்டாக்கினான் என்பது இவர்கள் கருத்து. நாடக மேடையிலும் 'இறைவன் என்னை ஏன் படைத்தான்' என்று பாடுகிறார்கள்.

சில நாள்களுக்கு முன் ஒரு சங்கத்து உல்லாச பவனத்தில் சில நண்பர்களுடன் பேசிக்கொண்டிருந்தேன். அவர்கள் வயது முதிர்ந்தவர்கள். நல்ல உலக அனுபவம் பெற்றவர்கள். கணக்கற்ற உபன்னியாசங்களைக் கேட்டவர்கள், நூல்களைப் பார்த்தவர்கள், அறநிலையத் தருமகர்த்தர்களாகவும் சேவை செய்தவர்கள், அப்படிப்பட்டவர்களில் ஒருவர் 'இறைவன் ஏன் ஒருவனைச் சிருட்டித்துக் கஷ்டப் படும்படி செய்கின்றான். அவனுடைய படைப்புச் செயல் திருவிளையாட்டு என்றால் இதனைச் செய்யாமலேயே இருக்கலாமே?" என்றார். "மக்களை அதாவது அவர்களுடைய ஆன்மாக்களை இறைவனா 'சிருட்டிக்கிறார்?" என்று கேட்டேன். 'பின் யார் சிருட்டிக்கின்றார், தாமே சிருட்டித்துக்கொள்ளுகின்றனவா?' என்று கேட்டார். "ஆன்மாக்

களும் அனுதி" என்றேன். "அப்படி எவ்வாறு இருக்கமுடியும், உலகில் எத்தனை ஆன்மாக்கள் இருக்கமுடியும்? ஆண்டு தோறும் இலட்சக்கணக்கில் பிறக்கின்றனவே! இவைகள் எப்போதும் இருந்தனவா? நம்பமுடியவில்லையே" என்ருர்.

இந்த உரையாடலின் கருத்தைச் சிறிது ஆராய்வோம். இந்தப் பெரியார்கள் நமது சமயக் கொள்கைகளைச் சற்றும் புரிந்துகொள்ளவில்லை. உலகில் வழங்கும் சாதாரணப் பேச்சுக்கள், வழக்கச் சமயக் கொள்கைகள், பிறசமயக் கோட்பாடுகள் இவைகளை மட்டும் இவர்கள் அறிந்துள்ளார்கள். பொதுவாக கிறிஸ்தவ, இசுலாமிய, யூதச் சமயக் கருத்துக்களை அறிந்திருக்கிருர்கள். தமது சமயத்து மேன்மையான கொள்கைளை இவர்கள் அறியவில்லை எனத் தோன்றிற்று.

படைப்பைப்பற்றி யூதர்களுடைய மறையில் அடியிற் கண்டவாறு சொல்லப்பட்டிருக்கிறது, 'ஆதியில் கடவுள் தனியாக ஒருவர் மட்டும் இருந்தார். வேருென்றும் எங்கும் இருக்கவில்லை. அவர் முதலில் மண்ணையும் விண்ணையும் படைத்தார், மண்ணில் மனிதனைப் படைத்தார். மனிதனுடைய உபயோகத்திற்காக உயிர் வருக்கங்கள் தாவர வருக்கங்கள் முதலியவற்றைப் படைத்தார். இந்தப் படைப்பை ஆறுநாளில் செய்து ஏழாம் நாள் ஓய்வு எடுத்துக் கொண்டார்' என்பதாகும். அவர்கள் கொள்கைப்படி மனிதனுக்கு ஆன்மா உண்டு. அவன் செய்யும் நன்மை தீமைகளுக்குத் தக்கபடி சுவர்க்கம் நரகம் அனுபவிப்பான். மற்ற உயிர்களுக்கு ஆன்மா இல்லை. அவைகளை மனிதன் கொன்று தின்னலாம். அதில் பாவம் இல்லை. மேலும் கடவுள் எல்லாம் வல்லவர். அந்த ஆற்றலினுலே ஒன்றும் இல்லாததிலிருந்து ஆன்மாக்களையும் மற்ற உயிர்களையும் உலகையும் படைத்தார் என்பதாகும். உயிர்களுக்கு ஒரே பிறப்புத்தான் உண்டு. இறந்தால் செய்த வினைக்குத் தக்கபடி சொர்க்கமோ, நரகமோ உண்டு. இந்தக் கொள்கைகளையே கிறித்தவமும் இசுலாமும் பின்பற்றின.

நமது மக்களிடையும் இக்கொள்கையில் ஒரு பகுதி ஊன்றிவிட்டதுபோலும். பொதுவாக மறுபிறப்பு என்பது நமது மக்களுக்கு ஒப்புதல் உண்டு. மற்றப் பகுதியாகிய கடவுள் படைப்பில் யூதர் கொள்கைக்கும் நம்மில் பாமர

மக்களின் நம்பிக்கைக்கும் அதிக பேதம் இல்லை. கடவுள் ஆன்மாவையும், உயிர்களையும் உலகையும் படைத்தார் என்பதே அவர்களிடம் பரவியிருக்கும் கொள்கை. நமது பண்டைய சமயக் கொள்கையை அறியாத குற்றமே இதற்குக் காரணம்.

இறைவன் இருப்பது போலவே ஆன்மாவும் எப்போதும் இருக்கிறது. இனி உலகும் உண்டு என்பதை நமது மக்கள் தெரிந்துகொள்வதில்லை, 'என்று நீ, அன்று நான்.' என்ற தாயுமானர் சொல்லின் பொருள் நமது பாமர மக்கள் அறியவில்லை, ஆன்மாவை இறைவன் படைக்கவில்லை. உலகையும் படைக்கவில்லை. அழிவுக் காலத்தில் அதாவது பிரளயகாலத்தில் இவைகள் ஒடுங்கி இருக்கின்றன. படைப்புக் காலத்தில் இவைகள் மீண்டும் வெளிப்படுத்தப் படுகின்றன என்பதுதான் சித்தாந்தம். ஆகவே படைப்பு என்பதற்கு ஒடுங்கியிருப்பது வெளிவரல் என்பதுதான் பொருள். புதிதாக உண்டாக்கப்படுவதல்ல. ஒன்றும் இல்லாததிலிருந்து உண்டாவதல்ல. உலகைப் படைப்பதும் அதுவே ஆகும். உலகம் எப்போதும் உண்டு. ஒரு நிலையில் இருக்கும் அது மற்றொரு நிலைக்கு மாற்றப்படும். இந்த மாறுதலே படைப்பு ஆகும். ஐந்து பூதங்களாக உலகு அமைந்திருக்கிறது. இந்த ஐந்து பூதங்களின் வேறுபாடே படைப்பு ஆகும். அந்த வேறுபாட்டை நிகழ்த்துபவன் இறைவன். அத்தொழில்தான் படைத்தற்றொழில். இதுவே தற்கால விஞ்ஞானமும் கூறுகிறது. அதாவது உலகில் உள்ள பொருள்கள் அழிவதில்லை, ஒரு பொருள் மற்றொன்றாக மாறுகிறது என்பதே அதன் முடிவு. ஆகவே சித்தாந்தத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் வேறுபாடு இல்லை.

இதனால் என்ன அறிகிறோம். 'இறைவன் என்னைப் படைத்தான்' என்று நாம் பொதுவாகக் கூறும் பேச்சு பொருளற்றது, உண்மையற்றது என்பதாகும். இறைவன் (பதி), பசுஉயிர் (ஆன்மா) உலகு (பாசம்) எல்லாம் எப்போதும் உள்ளவை. இதனைச் சித்தாந்தம் 'முப்பொருள் உண்மை' அல்லது 'சத்காரிய வாதம்' என்று கூறும். பிற மதங்களுக்கும் நமது சமயத்திற்கும் உள்ள வேறுபாட்டை நமது மக்கள் தெளிவாக அறியவேண்டியது அவசியம் அல்லவா?

——

# இயற்கையின் வளர்ச்சியும், இலக்கிய வளர்ச்சியும்

புலவர் - முருகவேள், பி. ஓ. எல்.

இந்நில வுலகம் தோன்றி ஏறத்தாழ 200 கோடி ஆண்டுகள் ஆகியிருத்தல் கூடும் என அறிவியல் அறிஞர்கள் கருதுகின்றனர். இவ்விருநூறுகோடி ஆண்டுகளில், உலக இயற்கையில், நிகழ்ந்து வந்துள்ள பெருமாறுதல்களும் வளர்ச்சிகளும் பலப்பல. அவைகளைப் பற்றி நிலநூல் (Geology), மனித நூல் (Anthropology), தொன்மை நூல் (Archaeology), இனநூல் (Ethnology), உயிர் நூல் (Biology) முதலிய துறைகளில் வல்ல பேரறிஞர்கள் விரிவாக ஆராய்ந்து விளக்கிவருகின்றனர். சிறப்பாக, சார்லஸ் டார்வின் என்பவருடைய "கூர்தல் முறைக் கொள்கை"யினை (Theory of Evolution) அறிந்தவர்கள் எவரும், உலகமானது பண்டை நாளில் இருந்த நிலைகளைவிட, எத்துணையோ வகைகளில் இன்று சிறப்புற வளர்ந்து முன்னேறி வருகின்றது என்பதனை வலியுறுத்திப் பேசுவர்.

இக் "கூர்தல் முறைக் கொள்கை" பற்றிய குறிப்புக்கள், "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி......எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்னும் திருவாசகப் பகுதியிலும், "ஒன்றறிவதுவே உற்றறிவதுவே..." எனத் தொடங்கும் தொல்காப்பிய மரபியற் சூத்திரங்களிலும் (27—33) எத்துணையோ பல நூற்றாண்டுகட்கு முன்னரே சுட்டப்பட்டிருப்பதனை நாம் காண்கின்றோம். எச்.ஜி. வெல்ஸ்* என்னும் அறிஞர் கூறுவதுபோல, வெறும் உடலமைப்பு ஒப்புமையை மட்டுமே ஆராய்ந்து, உயிர்வகைகளின் தோற்றம் பற்றி மேலைநாட்டறிஞர்கள் விளக்குகின்றனர். ஆனால் நம் பழம் பெருஞ் சான்றோர்களோ, உயிர் வகைகளின் தோற்றத்தினை அவற்றின் அறிவுநிலை வளர்ச்சிகளைக்கொண்டு சுட்டிக் காட்டி உணர்த்தியிருப்பது, "வியத்தொறும் வியத்தொறும்

---

*"......Their classification was based originally upon anatomical resemblances and took no account of any mental qualities." —*H. G. Wells*

வியப்பிறந் தன்றே" எனத்தகும் பெருமையினதாய்ப் பிறங்குகின்றது.

இஃது எங்ஙனமாயினும், மனித நாகரிகமும் அறிவும் படிப்படியே முன்னேறி வளர்ந்து வருகின்றன என்னும் உண்மைக்கு, இந்நாளில் மிகப் பலவாகப் பெருகிவரும் புதிய புதிய அறிவியற் காட்சிகளும் படைப்புக்களும் பெரிதும் சான்று பகர்கின்றன என்பதில் ஐயமில்லை. பண்டு குகைகளில் வாழ்ந்த மனிதன், இன்று பல அடுக்கு மாட மாளிகைகளில் வாழ்கின்றான். முன்னாளில் தழைகளையும் மரவுரிகளையுமே கொண்டு உடலை மறைத்து வந்த மனிதன், இந்நாளிற் பட்டும் துகிலும் பகட்டாக அணிந்து இன்புறு கின்றான். கட்டை வண்டிகளில் நத்தைபோல ஊர்ந்து சென்ற மனிதனின் பழங்கால நிலைக்கும், வானவூர்தியில் மிக விரைந்து பறந்து செல்லும் புதிய நாகரிக மனிதனின் நிலைக்கும் உள்ள வேற்றுமை சாலவும் பெரியதொன்றாகும். இன்னோரன்ன துறைகளிலெல்லாம் முன்னைய நிலைமை தாழ்ந்ததாகவும், பின்னைய நிலைமை சிறந்துயர்ந்ததாகவும் காணப்படுகின்றது.

இந்த அடிப்படையில் அமைந்த "கூர்தல் முறைக் கொள்கை"யின்படி நோக்கினால், இலக்கியங்களுள் முன்னே தோன்றியவை சிறப்பில்லாதனவாகவும், பின்னே எழுந்தவை சிறப்புடையனவாகவும் இருத்தல்வேண்டும்! ஆனால் நாம் காண்பது என்ன? நேர்முரணான—தலைகீழான நிலை!* "இங்கே ஒரு வியத்தகு தன்மை யுள்ளது. இலக்கியத்தின் ஒவ்வொரு துறையிலும் தலைசிறந்த பெருநூல்கள் முதன்முதலாகவே வருகின்றன; எதிர்பாராத நிலையில் தடுமென வருகின்றன; பின்னர் ஒருபோதும் அவைகள் திரும்ப வருவதே இல்லை! 'கூர்தல் முறைக் கொள்கை'யை

---

*"Here is a very odd thing. In literature the best in each kind comes first, comes suddenly and never comes again. This is a disturbing, uncomfortable, unacceptable idea to people who take their doctrine of evolution over-simply. But I think it must be admitted to be true. Of the very greatest things in each sort of literature, the master-piece is unprecedented, unique, never challenged or approached henceforth." —*Dr. I. A. Richards*

அளவுக்குமேற் பெரிதும் உறுதியாக எண்ணிக்கொண்டு இருப்பவர்கட்கு, இக்கருத்து மயக்கம் விளைவிப்பதாய்-இன்பம் நல்காததாய் - உடன்பாடிலதாய் இருக்கும்! ஆயினும், இக்கருத்து உண்மையானது என்றே ஏற்றுக்கொள்ளப் படல்வேண்டும்! இலக்கியங்களுள் ஒவ்வொரு துறையிலும், மிகவும் பெருமை வாய்ந்தனவாகத் திகழ்வனவற்றுள்ளே தலைசிறந்து நிற்கும் பேரிலக்கியமானது, தானே முதற்கண் தோன்றும்; ஈடும் எடுப்பும் இன்றி விளங்கும்; இனி எப்போதும் தனக்கு ஒப்பாகவோ அன்றி அணுக்கமாகவோ பிறிதெதுவும் நெருங்கமுடியாத நிலையில் சுடர்விட்டு ஒளிரும்" என, இயற்கையின் வளர்ச்சிக்கும் இலக்கியங்களின் வளர்ச்சிக்கும் இடையே உள்ள வேற்றுமையினை, டாக்டர் ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ் என்னும் ஆசிரியர் ஆராய்ந்து கூறி, இலக்கியங்களின் சிறப்பு இத்தகையது எனத் தெருட்டுகின்றார்.

அவர்தம் கூற்றின் உண்மை, தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம், பெரிய புராணம், சிவஞானபோதம், சிவஞானசித்தியார் என்பனபோன்ற தலைசிறந்த - முழுமணி யனைய - விழுமிய சைவத் தமிழ்ப் பேரிலக்கியங்களுக்குப் பெரிதும் பொருந்துவதொன்றாகக் காணப்படுகின்றது. இப் பேரிலக்கியங்களுக்கு ஈடாக இனி ஒருபோதும் இத்தகைய வேறு நூல்கள் தோன்றுதல் இயலாது என்பது திண்ணம். எனவே, ஒப்புயர்வற்ற இத்தெய்விகச் செந்தமிழ் நூல்களை நாம் திறந்தெரிந்து கற்றுத் தெளிந்து, சிறந்த பயன்களை அடைய முனைந்து முயலுவோமாக!

---

# இன்றைய சமயப் பணி

**வித்துவான் - அ. நடேச முதலியார்**

(மலர்-30; இதழ் - 3; 96-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஏன் இந்த நிலை?** இன்றைய உலகம் இளைஞர்களைப் பல துறைகளில் கவர்ந்து, சமய உண்மைகளை நினைக்கக் கூடச் செய்ய ஒட்டாமல் தடுக்கிறது. அதனால், நம் இளைஞர்களே சமயத்தைப்பற்றி இழிவாகவும், சமய உண்மைகளைப் பொய்யாகவும், சமய வாழ்க்கையைத் தாழ்வாகவும் வஞ்சகமாகவும் நினைக்கின்றனர். அங்ஙனம் நினைக்கவும் தூண்டு

கின்றனர் பிறர். பல சமயங்களில் எது உண்மை ? எது நம்முடையது ? எந்த உண்மையில் நம் வாழ்வு மலரும் என்ற எண்ணம் உண்டாக இளைஞர்கட்கு வாய்ப்பே இல்லை. பிற சமயத்தினர் இளமையிலேயே, குடும்பக் கல்வியாக, நம்பிக்கையின்மூலம், இளைஞர்கட்கு வீட்டிலேயே சமய உண்மைகளை ஓரளவு போதிக்கிறார்கள். பெற்றோர்கட்கு இருக்கும் சமயப் பற்றுக்கேற்ப அந்த இளைஞர்கட்கும் சமய அறிவு ஓரளவு பெறுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. ஆனால், நம் சமயத்திலோ பெற்றோர்கட்கும் சமய அறிவு கிடையாது என்றே சொல்லலாம். ஆகையால், நம் சமய இளைஞர் வீட்டில் சமய அறிவைப் பெறுவது முடியாத செயலாய்விட்டது. ஆகையால் சமயப் பற்றுடையோரே நம் இளைஞர்க்குச் சமய அறிவைப் புகட்டவேண்டிய பொறுப்புடையவர்களாகிறார்கள். வருங்காலத்தில், நம் சைவ சமயம் உலகப் பெருஞ் சமயங்களில் ஒன்றாக நிலை நிற்க வேண்டுமானால், கொள்கையினால் மட்டுமன்றி அதன் தொண்டினாலும் சிறப்படையவேண்டியிருக்கிறது. அதற்கு என்ன செய்வது ? அஃது இன்று நாம் மேற்கொள்ள வேண்டிய பணியன்றோ ?

சமயப் பணி : சமயத்துக்குச் செய்யும் பணி அல்லது தொண்டு என்று பொருள்படும். ஒரு காலத்தில் கொள்கையினால் உயர்வை நாட்டவேண்டி யிருந்தது. அன்றைக்குச் சமய வாதங்களும் நடந்தன. இன்று, உண்டு என்று சொல்லும் சமயமனைத்தும் ஒன்றெனக் காணும் சமரச நிலை வேண்டும் என்ற கொள்கை வலுப்பட்டது. காரணம் சமயப்பூசல், பல போர்களை எழுப்பின. சமய வேற்றுமை சமுதாய வேற்றுமையாக உருவெடுத்தது. அதனால், சமயங்கள் எந்த அமைதியையும் பொறுமையையும், சகிப்புத் தன்மையையும் தரவேண்டுமோ, அதற்கு மாறாகப் பூசலையும், வேற்றுமையையும் வளர்த்தன. அதனால், சமயப் பூசல் நீங்க, உண்டென்ற கொள்கையுடையார் அனைவரும் ஒன்று என்ற சமரசநிலை ஏற்படவேண்டியதாயிற்று. அங்ஙனம் சமரசம் காணும்போதே தத்தம் சமயநிலை யறிந்து அதன்கண் பற்றுடையனாய், அதன்வழி ஒழுகிப் பிறரையும், நேசித்துப் பிறரும் தன்னை நேசிக்கும்படி வாழக் கூடியவனாய் வளரவேண்டிய காலம் இதுவாயிற்று.

இன்றைக்குச் சமயப் பிரசாரம் எப்படி நிகழவேண்டும்? சமயப் பிரசாரம் கொள்கைகளை எடுத்தியம்பும் அம்மாத்திரத்தில் நிற்கக்கூடாது. பல சமய உண்மைகளைக் காட்டி நம் சைவ சமயத்தின் மேன்மையினைச் சொல்லளவால் நிலைநிறுத்தும் அம்மாத்திரத்தில் சமயப் பிரசாரம் நிற்கக்கூடாது. சமய குரவர்களையும், நாயன்மார்களையும் எடுத்துக்கூறிச் சமய உண்மைகளை நிலைநாட்ட முயலுவதாக மாத்திரம் சமயப் பிரசாரம் அமையக்கூடாது. இன்றைக்கும் சிலர் அங்ஙனமே பிற சமய மறுப்பும், நாத்திகக் கண்டனமும் கூறிச் சமயப் பிரசாரம் என்பதாக அமைத்துக் கொண்டு வருகின்றனர். அது காலத்துக்கேற்ற சமயப் பிரசாரம் ஆகாது. பிற சமயச் சூழலால், தாக்குண்ட போது, பிற சமய ஆக்கிரமிப்பால் சமயம் குன்றின காலத்து, அத்தகைய சமயப் பிரசாரம் வேண்டியிருந்திருக்கலாம். இன்றைக்கு இளைஞர்களையும் பிறரையும், விஞ்ஞான விபரீத உலகம் கவர்ந்திருக்கிறது. ஒழுக்கத்துக்கு உயர்வில்லை. இந்நிலையில் எத்தகைய சமயப்பணி வேண்டும் என்பதே பெரிய கேள்வி. "இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே, ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்" என்ற வள்ளுவர் வாக்கின்படி வாழ்வில் ஒழுக்கம் குன்றித் தலைதடுமாறும் இந்நிலையில், ஒழுக்கமுடையாராய்ச் சமயநெறி நிற்கும் சான்றோர், சமய உண்மைகளை எடுத்துக்கூறித் தம் வாழ்வினாலும் இளைஞர்களைக் கவரவேண்டும். உருகி உருகி நெக்கு நெக்கு உள்ளுடைந்து கசிந்திட்டு அசும்பூறும் உழுவலன்பிற் பழஅடியார்களாய்ச் சமயப் பிரசாரகர் மலிய வேண்டும். வேடமும் நீறும் விளங்க நிறுத்தும் நல்லடியார் சமயப் பிரசாரகர்களாய் வெளிவரவேண்டும். ஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சமயப்பணி பூண்டபோது, எங்ஙனம் அடியார் கூட்டம் சூழ நாடுமுழுதும் சமயப் பிரசாரம்செய்தனரோ அங்ஙனமே, நல்லன்பர் பலராய்க்கூடி, ஒழுக்கந் தலைநின்று அன்பினோடும், இன்சொல்லோடும், ஆலயக்கூட்டு வழிபாடு நடத்திச் சமயப் பிரசாரம் தொடங்கவேண்டும்.

நம் நாடு சிறு சிறு கிராமங்களையுடையது. சில பெரிய நகரங்களும் உள்ளன. கிராமங்களிலும், நகரங்களிலும், இன்று சமயப் பணிக்கென்று என்ன ஒரு முறையான தொண்டு நடைபெறுகிறது. இல்லை என்றே சொல்லலாம்.

அதற்கு, அந்த அந்தக் கிராமத்திலும், ஒருவர் இருவரைத் தேர்ந்தெடுத்து, அக்கிராம மக்களுக்கும் இளைஞர்கட்கும், கூட்டு வழிபாட்டினையும், ஆலய வழிபாட்டினையும், செய்து வைத்துச் சமய உண்மைகளையும், ஒழுக்கத்தின் உயர்வினையும், நாட்டுப்பற்று மொழிப்பற்றோடு கூட்டி எடுத்தியம்ப ஏற்பாடு செய்யவேண்டும்.

சமயப்பணி மேற்கொள்வோர்க்குச் சமுதாயத்தின் நெருங்கிய தொடர்பு இருக்கவேண்டும். பொதுமக்கள், அவரை நம்மவர், நமக்கினியர், நமக்கு நல்லன கூறி, நல்லன செய்பவர் என்று எண்ணும்படி அவர் நடக்க வேண்டும். அவரைக் கண்டு அவர் படித்தவர், நம்மை மதிக்கமாட்டார். அவரை அழைப்பதெப்படி? என்று அஞ்சும்படி இருத்தல் கூடாது. வலிந்து சென்று நன்மை செய்யக்கூடிய, சொல்லக்கூடிய அருளுள்ளம் உடையவர்களாய்ச் சமயப் பிரசாரகர் விளங்கவேண்டும்.

இத்தகைய நிலை உண்டாவதற்கு என்ன செய்வது? நம் சமாஜமும், மடங்களும், பெரிய திருக்கோயில்களும், அறநிலையப் பாதுகாப்பினரும், சமயப் பிரசாரகர்களை உண்டாக்கவேண்டும். ஒழுக்கமுடையராய், சமயப் பற்றுடையராய் உள்ள இளைஞர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கட்கு, சமய நூல்களையும், பிரசார முறையினையும், வழிபாட்டு முறையினையும் முறையாகக் கற்றுக்கொடுத்து அவர்கட்கு வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளையும் செய்துகொடுத்து அவர்களை நல்ல பேச்சாளர்களாகவும், நல்ல செயலாளர்களாகவும், நல்ல தொண்டர்களாகவும் ஆக்கிச் சமுதாயத்துக்குச் சமயப் பணியில் ஈடுபடுத்த முன்வரவேண்டும்.

---

# சிவப்பிரகாசர் செய்யுள் நயம்

**வித்துவான் மு. அருணசலம் பிள்ளை,**
*தமிழ் விரிவுரையாளர், அண்ணமலைப் பல்கலைக் கழகம்.*

**க**ற்றுவல்ல புலவர்களால் கற்பனைக் கருவூலம் எனப் பாராட்டப்பெறும் சிவப்பிரகாச அடிகளார் இயற்றியருளிய நூல்கள் பல. அவையனைத்தும், சொன்னயம் பொருணயம் இலக்கண அமைதி தருக்கமுறை சமயக் கருத்து அணிநலம்

ஆகிய நுட்பங்கள் தொட்ட தொட்ட இடந்தொறும் செறியப்பெற்று ஆராய்ந்து படிப்போர்க்கு அளவிலா இன்பம் பயப்பனவாகும். அவற்றுட் சில செய்யுட்களை எடுத்துக் காட்டாக ஈண்டுக் காண்போம்.

வனவசை மாநகரைத் தலைநகராகக் கொண்டு விளவல தேயத்தை ஆண்டுவந்த மமகாரன் என்னும் பேரரசனும், அவன் பட்டத்து மனைவியாகிய மோகினி யென்னும் அரச மாதேவியும் நெடுங்காலம் மகப்பேறின்றி வருந்தி உமை யம்மையைக் குறித்துச் செய்த அரிய நோன்பின் பயனாக ஒரு பெண் மகவைப் பெற்றனர். அம்மகவினை அரசமாதேவி அன்போடு வளர்த்த முறை பற்றிப் பிரபுலிங்க லீலையிற் கூறுமிடத்து, “மிடியன் ஒருசெய் யாளன்அச்செய் விளையக் காக்கும் செயல்போலப், படியில் கல்வி விரும்பினோன் பாடம் போற்று மதுபோல, ஒடிவில் செங்கோல் மனுவேந்தன் உலகம் புரக்கு முறைபோலக், கொடிய நோன்பு செய்தீன்ற கொடியை வளர்த்தாள் மோகினியே” என்ற செய்யுள் உள்ளது.

இதன்கண் அரசமாதேவி தான் பயந்த அருமந்த மகவைப் பேணி வளர்த்த பெற்றியினை அடிகளார் மூன்று உவமைகளால் விளக்குகின்றார். இவற்றுள் முதல் உவமை “வறிஞன் ஓம்புமோர், செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்” என்ற கம்பர் வாக்கையும், மூன்றாம் உவமை “காவல் குழவி கொள்பவரின் ஓம்புமதி” என்ற நரிவெரூஉத் தலையார் பாடற் பகுதியையும் நினைவூட்டுகின்றன. கம்பர் தசரதனது ஆட்சிச் சிறப்பைப் புலப்படுத்தற்கு எடுத்தாண்ட கருத்து, இங்கு அரசமாதேவி தன் அருமை மகவை வளர்த்த முறைமைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. நரிவெரூஉத்தலையார் ‘குழந்தையை வளர்ப்பவர்போல உலகத்தைக் காப்பாயாக’ என ஓரரசனுக்குச் செவியறிவுறுத்தினர். ஈண்டு நம் அடிகளார் வேந்தன் உலகம் புரக்கும் முறைபோல அரசமாதேவி மகவை வளர்த்தாளென அதனையே மாற்றிக் கூறியுள்ளார். இங்ஙனம் புலவர் பெருமக்கள் ஓர் அரிய கருத்தினை இடத்திற்கேற்றவாறு அமைத்துக்கூறும் முறை பாராட்டற்குரியது. இது நிற்க.

அரசமாதேவி தன் மகவினை வளர்த்த முறையை விளக்குதற்கு மூன்று உவமைகள் கூறவேண்டுமா? கூறின்

அவை ஒன்றற்கொன்று வேறுபாடும் பொருட் சிறப்பும் உடையனவாதல் வேண்டுமன்றோ? போற்றி வளர்த்த லாகிய பொதுத்தன்மை யொன்றே பற்றிவந்த இவற்றாற் பெறப்படும் பொருள்நயம் என்ன? என்பவை ஈண்டுச் சிந்தித்தற்குரியன.

இவற்றுள், முதலாவதாகக் கூறப்பட்டிருக்கும் உவமை, "மிடியன் ஒரு செய்யாளன் அச்செய் விளையக் காக்கும் செயல்போல......கொடிய நோன்பு செய்தீன்ற கொடியை வளர்த்தாள் மோகினி" என்பது. இதன் பொருத்தத்தை நோக்குவோம்.

வறுமையால் வாட்டமுற்று வருந்திய ஒருவன், நெடு நாள் முயன்று ஈட்டிய பொருள்கொண்டு தனது ஆகூழ் வசத்தால் ஒரு சிறு நன்செய் வாங்கினனாயின், அதன்கட் பயிர்செய்து விளைவிற் பங்கு பெறுதற்குப் பலர் விரும்பி னும், அச்செய்யினை அவர்கள்பால் விட்டிராது, உட லூரமும் பயிர்த்தொழிலில் உள்ளக் கிளர்ச்சியும் உடைய அவன், அதன்கண் விளையும் பயன் முழுதுந் தானே கொள் ளக் கருதி, உழுதல் எருப்பெய்தல் களைகட்டல் நீர்கால் யாத்தல் காத்தல் ஆகிய தொழில்கள் அனைத்தையும் தானே முயன்று செய்தல் உலகியலிற் காணப்படுவது. அதுபோல, அரசமாதேவியும் பிள்ளையால் மிடிமைப்பட்டு நெடுங்காலம் வருந்தி உமையம்மையைக் குறித்துச் செய்த அரிய நோன் பின் பயனாக ஒருமகப் பெற்றாள். அச் செல்வமகளை வளர்த் தற்குச் செவிலித் தாயர் பலர் இருப்பினும் அவர்கள்பால் விட்டுத்தான் வாளாவிருக்க மனமொருப்படாமல், உடற் கின்பம் செவிக்கின்பம் முதலான ஐம்புல இன்பங்களும் ஆரத்துய்க்கும் ஆர்வமேலீட்டால், பாலூட்டல் நீராட்டல் பூசுவன பூண்பன புனைந்துகாண்டல் தாலாட்டல் முதலிய செயல்கள் அனைத்தையும் தானே செய்து மகிழ்ந்தாளாத லின், இங்ஙனம் வளர்த்த முறையை விளக்குதற்கு இவ் வுவமை கூறியது மிகப் பொருத்தமாகும்.

இனி இரண்டாவது, "படியில் கல்வி விரும்பினோன் பாடம் போற்றுமதுபோல......வளர்த்தாள்" என்பது. இதன் பொருள்: ஒப்பற்ற கல்வியை விரும்பிய மாணாக்க னொருவன் மூல பாடங்களை மறவாமற் பாதுகாத்தல்போல, மோகினி மகவை வளர்த்தாள் என்பதாம்.

ஒப்பற்ற கல்வி விருப்பமாவது, தனக்கு ஒத்தாரும் மிக்காரும் இல்லாராகத் தான் ஒருவனே கல்வியில் உயர்ந் தோனுதல் வேண்டுமென விரும்புதலாகும். இவ்விருப்ப முடையானுக்குப் பாடம் போற்றல் ஒன்றே சிறந்த கருவி யாகுமோ எனின், ஆகாது. வேறு என்னையெனின், 'பாடம் போற்றல்' என்னும் இத்தொடர்மொழி, கல்வி பயிலும் ஒருவன் கடைப்பிடிக்க வேண்டுவன வெல்லாம் தொகுத்துக் கூறியதொரு நூற்பாவினின்றும் எடுத்துக் கொள்ளப்பட்டதாகலின், 'ஒருமொழி யொழிதன் இனங் கொளற் குரித்தே' என்னும் விதியால், அதன் இனமாக ஓதப்பெற்றவையனைத்தும் ஈண்டுக்கொள்ளுதல் அமையும். அவை :—

" நூல்பயில் இயல்பே நுவலின்வழக் கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை அமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினுதல் வினுயவை விடுத்தல் "

என்பனவாம். இவை யெல்லாவற்றுள்ளும் பாடம் போற் றல் முதன்மையானதாகலின் அஃது ஈண்டு எடுத்தோதப் பட்டது.

இதனுல், பாடம் போற்றுதலுடன், உலகியலை ஆராய்ந் தறிதலும், ஆசிரியன்பாற் கேட்ட பொருள்களை மறவாது சிந்தித்தலும், மீண்டும் மீண்டும் ஆசிரியனை யடுத்து அப் பொருள்களை ஐயமறக் கேட்டுத் தெளிதலும், கல்வி யாளரொடு பழகுதலும், தான் ஐயுற்ற பொருளை அவர்பால் வினுதலும், அவர் வினுயவற்றிற்குத் தான் மறுமொழி கொடுத்தலும், இவைபோல்வனவும் படியில் கல்வி விரும்பி னேன் கடைப்பிடித்தொழுக வேண்டுவனவாகும். அவ் வாறே மோகினியும், முன்னர்க் கூறியவாறு அக்குழந்தை யின் வளர்ச்சிக்கு ஆவன அனைத்தும் தானே முயன்று செய்து வந்ததனேடமையாது—தன் அரும்பெறன் மகவை ஏனையோரைக் காட்டினும் சிறந்த முறையில் வளர்த்தல் வேண்டுமென்னும் வேட்கை மிகப் பெற்றுளாதலின், பருவ மாற்றங்கள், உண்டி வேறுபாடு முதலிய காரணங்களால் ஒரோவழிச் சிறுநோய் தோன்றினும் அதனைச் சிறிதும் பொருளாய்ச், செம்முது செவிலியர் நன்மருத்துவர் ஆகி

யோர்பால் அந்நோய்க் கூறுகளை அடுத்தடுத்து எடுத்துக் கூறி நோய் நீக்கத்திற்காவன கேட்டலும், அவர்கள் கூறுவனவற்றை ஐயமறக் கேட்டுத் தெளிந்து அவ்வாறே செய்தலும், தன்னோடொத்த பருவத்தினராய் மகப்பெற்று வளர்க்கும் மகளிரையழைத்து அவர்களோடு அளவளாவி அறியவேண்டுவன அறிதலும், பிறவும் மேற்கொண்டாளாகலின் இவ்வுவமையும் மகவு வளர்ப்பிற்கு இன்றியமையாது வேண்டப்படுவதாயிற்று.

இனி, "ஒடிவில் செங்கோல் மனுவேந்தன் உலகம் புரக்கும் முறைபோல......வளர்த்தாள்" என்பது மூன்றாவது உவமம்.

கெடுதலில்லாத செவ்விய ஆட்சிநடாத்திய மனு என்னும் பெயர்பெற்ற வேந்தனாகிய சோழர்குல முதல்வன் உலகம் புரக்குமுறைபோல வளர்த்தாள் என்பது இதன் பொருள்.

மனு என்னும் வேந்தன் உலகம் புரக்கும் முறையாக வெளியிட்ட கருத்துக்கள் திருத்தொண்டர் புராணத்துட் செவ்வியிற் கூறப்பட்டுள்ளன. அவை :—

"மாநிலங்காவல் செய்யும் வேந்தன், தன்னாலும் தன்னைச் சார்ந்தவராலும் பகைவராலும் கள்வராலும் பிறவுயிர்களாலும் குடிகளுக்கு அஞ்சத்தக்க தீங்கு நேராமற் காத்து அறத்தை நிலைநாட்டுவோனாதல் வேண்டும்; அதுவே உலகம் புரக்கும் முறை; அவனே மாநிலங் காவலன் ஆவான்" என்பனவாம்.

அவ்வாறே அரசமாதேவியும், தன்னாலும், தன்னைச் சார்ந்தோரான செவிலித்தாயர் ஏவற்சிலதியர் என்னும் இவர்களாலும், தன்னொடு மாறுபட்ட கருத்துடைய பிறராலும், நச்சணுக்கள் முதலிய பிற உயிர்களாலும் அஞ்சத்தக்க நோய் முதலியன நிகழாவண்ணம் பாதுகாத்தும், தெய்வத்தால் நிகழ்வனவற்றைத் தீய நிமித்தங்களால் முன்னரே யறிந்து சாந்தி செய்து போக்கியும் மகவை வளர்த்தாளாகலின் இவ்வுவமையுங் கூறவேண்டுவதாயிற்று.

இன்னும் 'ஒடிவில் செங்கோல் மனுவேந்தன்' என்பதற்கு, மனு என்னும் பெயர்பெற்ற செங்கோல் வேந்தன் என்று பொருள் கோடலேயன்றி, ஆதிமனு வகுத்த நெறி பிறழாமல் செங்கோல் செலுத்தும் வேந்தன் எனவும் பொருள்கொண்டு, அங்ஙனம் ஆட்சிசெய்த வேந்தருள் இரு

வர், உலகம் புரக்கும் முறைபற்றித் தம் சொல்லாலும் செயலாலும்-உலகுக்கு அறிவுறுத்தவற்றையும் ஈண்டு உவமையாகக் கொண்டு பொருள்நயங் காண்டலும் பெருந்துவதாகும்.

சேங்குட்டுவன் என்னும் செங்கோல் வேந்தன் உலகம் புரத்தல் பற்றிக் கூறியவை,

"மழைவளங் காப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதக்வு இல்லை"

என்பனவாம். அஃதாவது, 'நாட்டில் பருவமழை பொய்ப்பினும், விளைவு குன்றினும், உயிர்கள் யாதேனும் ஓராற்றால் வருத்தமுறினும் ஆட்சி தவறுடைத்தென உலகம் பழிக்குமேயென அரசன் எப்போதும் அஞ்சவேண்டுவதாயுள்ளது. ஆகலின் அரசர்குடியிற் பிறத்தல் துன்பமல்லது இன்பந்தருந் தகுதிப்புடைத்தன்று' என்பதாம். இஃது, அவன் பல்லாண்டுகள் உலகாண்டு கண்டறிந்த உண்மையுரையாகலின் இதனை மறுத்தல் இயலாது. இது போன்று, மோகினியும், எக்காரணத்தாலேனும் தன் மகவு சிறு வருத்தமுறினும் அது கண்டு பெரிதும் அஞ்சுதலும், நோய் முதலிய துன்பமின்றி நன்னிலையிலிருக்கும்போதும், அடுத்த இல்லத்திலோ தெருவிலோ ஊரிலோ நாட்டிலோ உள்ள குழந்தைகட்கு இன்னின்ன நோய்கள் உண்டாகின்றன எனப் பிறர் சொல்லக் கேட்பின், தன் மகவுக்கும் அத்தகைய நோய் வந்தணுகுமோ என அன்பின் மிகுதியால் அச்சமுறுதலும், மதலையைப் பெறுநாள் துன்பம், வளர்த்திடு நாளுந் துன்பம்......இங்ஙனம் எற்றைக்குந் துன்பமேயெனின், பெண்ணாகப் பிறந்து மகப் பெற்று வளர்த்தல் இன்பந் தருதல் இல்லைப்போலும், என எப்போதும் அஞ்சுதலும் உடையளாகப் பேணி வளர்த்தாளென்பதும்,

ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் என்னும் செங்கோல் வேந்தன், தனது தீயூழ் வசத்தால் ஆராயாமற் கூறிய சொற்காரணமாகக் கோவலன் கொலையுண்டான் என்பதை யுணர்ந்த அளவில், யானோ அரசன்; யானே கள்வன்; மன்பதை காக்குந் தென்புலங்காவல் என்முதற் பிழைத்தது ஆகலின், செம்மையின் இகந்த இத் தீச்சொல்

எம்மன வேந்தர் செவிப்புலம் படருமுன் வல்வினை வளைத்த கோலை நிமிர்த்துச் செங்கோலாக்குவதற்கு என் உயிர் விடுத்தலே தக்கதெனத் துணிந்து உயிர்விட்டாற்போல, அரசமாதேவியும், மேற்கூறியவாறு எப்போதும் அச்சம் உடையளாய் இருந்தமையோடு, பன்னெடுங்காலஞ் செய்த தவத்தின் பயனாகப் பயந்தெடுத்த இம்மகவு, என் வல்வினையும் உற்று நோக்காமையுங் காரணமாக உயிரிழக்கநேரின் யான் உயிர் வாழேன் என்ற கருத்தும் உடையளாய் வளர்த்தாளென்பதும் இரண்டாவது கொண்ட பொருளாற் பெறப்படும்.

தமிழ்நாட்டு முடியுடைப் பெருவேந்தர் மூவரும் ஒடிவில் செங்கோல் மனுவேந்தராகலின், அவர்கள் சொல்லாலும் செயலாலும் உணர்த்திய உலகம் புரக்குமுறைபோல, மோகினி மகவை வளர்த்தாள் என மூன்றாவது உவமையை விரித்துக் கொள்ளுதல் குற்றமாகாது.

இதுகாறுங் கூறியவற்றால், அரசமாதேவி பிள்ளையால் மிடிபட்டவளாதலின் தான் அரிதிற் பெற்ற மகவை வளர்த்தற்குச் செவிலித்தாயர் பலர் இருப்பினும் அவர்கள் பொறுப்பில் விடாமல், ஊட்டல் ஒலுறுத்தல் முதலிய அனைத்தும் தானே செய்து வளர்த்தாளென்பதும், ஏனைய மகளிர் பெற்று வளர்க்கும் பிள்ளைகளினும் தன் மகவு மேலான வளர்ச்சியுறுதல் வேண்டுமென்னும் நினைவால், தன்னின் மிக்காரும் ஒத்தாருமாகிய பலரோடும் அளவளாவி அறியவேண்டுவன அறிந்து நன்முறையில் வளர்த்தாளென்பதும், அங்ஙனம் வளர்த்துவருங்காலும், தன்னாலும் தன்னைச் சார்ந்தோர் முதலிய பிறராலும் தீங்கு நேராமற் குறிக்கொண்டு காத்தும், எதிர்பாராதவாறு ஏதேனும் தீங்கு நேர்ந்துவிடுமோ என அஞ்சியும், எக்காரணத்தாலேனும் இம்மகவு உயிரிழக்கநேரின் யான் உயிர்வாழேனெனக் கருதியும் வளர்த்தாளென்பதும் பெறப்பட்டன.

இங்ஙனம் அரும்பெறல் மகப்பெற்று வளர்ப்பார்க்கு இயல்பாகத் தோன்றும் எண்ணங்களையும், அவர்கள் மேற்கொள்ளுஞ் செயல்களையும் புலப்படுத்தற்காகவே, மதிநுட்பம் நூலோடுடைய அடிகளார் மூன்று 'உவமைகளையெடுத்துக் கூறினர் எனக் கொள்ளுதல் பொருந்தும்.

# பாடி வழிபடுதல்

இரா. ஜெயதேவ்

தமிழர்கள் இறைவன் அடி சேர்வதற்கு வழிபட்ட முறைகள் பல வகைகள். அவற்றுள் ஒருசிலர் மெய்ப் பொருளைப் பாடி வழிபடுதலின்மூலமே இறுதியில் வீடு என்னும் பேற்றை அடைய விரும்பினார்கள். இம்முறை சங்ககாலம் தொட்டே நிலவி வந்துள்ளது. அக்காலத்திலும் அதன் பின்னரும் பாணர் என்ற குலத்தினர் யாழின் உதவி யால் பண்பாடி வழிபட்டார்கள். இவர்களுள் மிகச் சிறந்து விளங்கியவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர். இவர் திருஞான சம்பந்தர் உடன் சென்ற இடம் எல்லாம் உடன் சென்று யாழ் இசைத்துப் பண்கூட்டி வழிபட்டு வீடு பேற்றை அடைந்தார்.

தமிழில் தோன்றிய பாடல்கள் அனைத்தும் அறம் பொருள் இன்பம் வீடு என்று நான்கு வகைகளை உணர்த் தும். அவற்றுள் நான்காவதாக விளங்கும் வீட்டினை அடை யப் பாடியே வழிபடுவோரைக் குறித்து ஒரு சிறிது இங்கு எழுதுவோம்.

பண் இசைத்துப் பாடி வழிபட்டோர் சைவப் பெரு மக்களில் நால்வர்களும், வைணவப் பெரியார்களில் பன் னிருவரும் திகழ்ந்து விளங்கினார்கள். இவர்களில் திரு வாசகம் அருளிய மாணிக்கவாசகரும், திருப்பாவை அருளிய ஆண்டாளும் அவர் அவர் பாடல்களின் வாயி லாக "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில்" நீரா டப்போகும் மகளிர் பாவை நோன்பினைப் பூண்டு பாடல் பாடி வழிபட்டுவந்த முறையைச் சிறப்பாகக் கூறியுள்ளார் கள். அன்னார் முறையே திருவெம்பாவை, திருப்பாவை என்ற சிறந்த பனுவல்களைப் பாடி இருக்கின்றனர். அவை கள் மகளிர் மேற்கொள்ளும் வழிபாட்டினை விளக்குவன வாகும்.

திருஞானசம்பந்தர் "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய" தமது தேவாரப் பாடலில் உலகவர்க்கு ஈந்தது யாது எனில் தாளம் என்று குறிக்கப்பட்டிருப்பினும்

" மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப் பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே " என்றதின் வாயிலாகப் பாடி வழிபடுதலின் சிறப்பு தெற்றென விளங்கும். அவ்வளவில் நில்லாது, " தமிழ் மாலை ஆதரித்திசை கற்றுவல் லார்சொலக் கேட்டுகந்தவர் தம்மை வாதி யாவினை மறுமைக்கும் இம்மைக்கும் வருத்தம் வந்தடையாவே" எனப் பாடியும் வழிபடுதலின் சிறப்பினைக் கூறியுள்ளார். அப்பர் அடிகள் தமது பாடலில் இறைவனை " வாக்கினுள்ளான் வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர் இனத்தகத்தான் " எனவும், " பண்ணுண்ட பாடலோடும் பரமனீ யாடுமாறே " எனவும், " பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகீ " எனவும், " கருத்தனாய்ப் பாடமாட்டேன் காம்பன தோளி பங்கா " எனவரும் பாடலின் அடிகளின் வாயிலாய் வழிபாட்டின் சிறப்பினை உடன் பாட்டிலும் எதிர்மறைப் பொருளிலும் பண்ணிசைத்துள்ளார்கள். அருணகிரிநாதர் அருளிய கந்தரநுபூதியில் இறைவனை நோக்கித் தனக்குப் "பாடும் பணியே பணியாய் அருள்வாய் " என்று விண்ணப்பித்துக்கொள்ளும் முறையீட்டினை உணரலாம். மற்றும் கந்தர் சஷ்டியில் காணும் "உன்னைப் பாட * * * * * பாடினேன் நாடினேன் பரவசமாக " என்னும் கூற்றின் வாயிலாகப் பாடியும் வழிபடுதலின்- மூலம் உள்ளொளியைப் பெருக்கி இறைவனை அடைந்தார்கள்.

" என்பூடு கரைந்துருகும் இன்னிசை " என்று பெரிய புராண ஆசிரியர் சேக்கிழார், பாட்டிசையின் நிலையை விளக்கியுள்ளார். பாட்டு இசைத்தால் எப்பேர்ப்பட்ட எஃகு எலும்பையும், உள்ளத்தையும் கரைந்துகொள்ளும். இந்நிலையில் பாடியும் வழிபடுவதால் " ்ள்ளம் கவர் கள்வனை " அடையப் பெறலாம்.

பாடி வழிபடுதல் என்னவென்று இனி ஆராய்வோம். உலகில் உள்ள அண்டங்கள், கோளங்கள் இவைகளில் முதற்கண் தோன்றியது ஓசை. அவ்ஓசை வடிவம் பெற்றுப் பின்னர் மொழியாய்ப் பெருகி, பாடல்களாய் விளங்கியது. இந்தப் பாடல்களை மக்கள் வாயாரப் பாடியும், இறைவனை வாழ்த்தியும் வீடுபேற்றினை அடையப் பெறும்

முறையையே தழுவினர்கள். அதுதான் பாடி வழிபடுதல் எனச் சொல்லப்பெறும்.

தற்கால விஞ்ஞானமுறையின் வாயிலாக இனி அறியப் பெறும் இசையின்பகுதிகளைச் சிறிதுஇவ்விடத்தில் தெரிந்து கொள்ளவேண்டும். ஒரு இசைக்கருவியின் உதவியால் ஒலியை எழுப்பும்போது, ஒரு ஓசை கிளம்பும். அந்த ஓசை அலைகளாய் மாறிக் காற்றிலே பரவுகின்றது. இனி இரண்டு இசைக் கருவிகளின் உதவியால் ஒலியை எழுப்பும்போது ஓசை அலைகள் இருமடங்காய் வேறுபட்ட ஓசைகளாய் ஒலிக்கின்றன. எனவே இவ்வகையில் பலவகைப்பட்ட இசைக்கருவிகளைக் கொட்டும்போது ஓசை பலவகைப்பட்ட அலைகள் வாயிலாக ஒலிக்கின்றன. ஆனல் அதே சமயத்தில் இரு இசைக் கருவிகள் கொட்டும்போது ஒரே ஓசை அலையை உண்டாக்கும்படியாகவும் செய்யலாம். அதற்குக் கொட்டும் இரு இசைக் கருவிகளின் பான்மையும் ஒன்ருய் இருக்கச் செய்யவேண்டும். ஒரே காலத்தில் கொட்டவும் வேண்டும். இந்நிலையில் இவ்விரு இசைக் கருவிகள் கொட்டவும் வேற்றுமை ஓசை அலைகள் தோன்ரு நிலையை எய்தும். இதைப்போன்றே இரு இசைக் கருவிகளுக்குப் பதிலாக, வேற்றுமை ஓசை அலைகள் தோன்ருக் குரல் படைத்த இருவரை அல்லது பலரைக் கூட்டிப் பாட்டிசைத்தால் ஒரே நிலை ஓசை அலை எழும்பும். இம்முறையைக் கையாண்டமேல் நாட்டார் அன்னர் மொழியில் கோரஸ் (Chorus) என அழைப்பார்கள்.

இனி ஒருவர் பாடும்போது எழுப்பும் குரல் தன் உள்ளத்தைத் தொட்டு, தன்னிலையை மறக்கச் செய்து இறைவனிடம் “காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது” என்னும் வாக்கின்படி தன் உள்ளொலியை பெருக்கிச் செயல் ஆற்றும்படி பாடி வழிபடுதலின்மூலம் மெய்ப்பொருளினை அடையும் பெரும் பேற்றினைப் பெறலாம். இந்நிலையும், கர்ம யோகத்தின் மூலம் “கருமமே கண்ணயினர்” என்று செயல் ஆற்றி இறைவனை அடையப்பெறும் நிலையும், ஒன்றுபடும் எனக் கூறலாம். இவ்வாற்ருற் பாடி வழிபடுதலின் சிறப்பினை தொகுத்துக் கூறலாம் அல்லவா?

—

# திருமுருகாற்றுப்படை சைவ சித்தாந்த விளக்கமே*

வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்

## 1. தோற்றுவாய்

சிவநேசச் செல்வர்களே !

வணக்கம். பொறிவாயில் ஐந்து அவித்தான் பொய் தீர் ஒழுக்க நெறிநின்ற பெரியோர்கள் கூடியுள்ள இப் பேரவையில் சிற்றறிவுடைய சிறியேன் பேசத் துணிவது எனக்கே நகைதருகின்றது. ஆயினும் இத்தகைய பேரவையில் பேசவேண்டும் என்ற ஆர்வம் என்னைப் பிடர் பிடித்து உந்துவதால் பேசத் தொடங்குகின்றேன். என் குற்றங்கள் நீக்கிக் குணம் கொண்டு கோதாட்டுவீர்கள் என்ற நம்பிக்கையோடு தொடங்குகின்றேன்.

" திருமுருகாற்றுப்படை சைவ சித்தாந்த விளக்கமே " என்பது என் பேச்சு. சைவ சித்தாந்த சமாசத்தின் ஐம்பத்தொன்றாவது ஆண்டுவிழா நடைபெறுகின்ற இப் பெண்ணுகடத்தில் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் அவதரித்தருளிய, பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய்கண்டவராகிய மெய்கண்டதேவ நாயனார் இயற்றியருளிய சிவஞான போதமே சைவ சித்தாந்த சமயத்தைத் தருக்கநெறி வழாது ஆராய்ந்து இலக்கணமுறையில் விளக்கும் சிறந்த முழு முதல் நூல் என்பது யாவரும் அறிந்ததே.

பெருமலை வடிவைத் தன்னுள் அடக்கிக்காட்டும் புல் நுனிப் பனித்துளிபோல அரும் பெருங் கருத்துக்களைத் தன்னுட்கொண்டு அளவிற் சிறியதாய் விளங்குவது அச் சிவஞானபோதம். இறை உயிர் உலகு என்ற முப்பொருள் இயல்புகளை முறையுறத் தெளிக்கும் சமய நூல் அதற்கு முன் தோன்றவில்லை என்பது உண்மையே. ஆயினும் அச் சிவஞானபோதத்துக் கூறப்படுங் கருத்துக்கள் பன்னிரு திருமுறைகளிலும் அவற்றிற்கு முற்பட்ட சங்க நூல்களிலும் இலைமறை காய்போல் காணப்படுகின்ற கருத்துக்களே என்பதை அந்நூல்களை ஆழ்ந்து நோக்குவோர் அறிவர்.

---

*சைவசித்தாந்த மகாசமாச 51-வது ஆண்டுவிழாவில் நிகழ்த்திய சொற்பொழிவு.

அந்நூல்களில் திருமுருகாற்றுப்படை என்பது பொய் யடிமை யில்லாத சங்கப் புலவருள் ஒருவராகிய நக்கீரரால் செய்யப்பட்டது. பத்துப் பாட்டுள் முதற் பாட்டாய் முன் னிற்பது. முருகனையே பதியாகக் கொண்டு போற்றுவது. தன்னை ஓதுவோர்க்கு இருமைப் பயனையும் எய்துவிப்பது. பழுத்த சுவையுடை முழுத்தமிழ்ச் சொற்களால் பத்திச் சுவை நனி சொட்டப் பாடப்பட்டது. விழுமிய நடையும் ஒழுகிய தொடையுமுடையது. பயில்தொறும் பயில் தொறும் நயமிகத் தந்து இன்புறுத்தும் இயல்பினது.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் கடைச் சங்கம் முடி வுற்றது என்பது ஆராய்ச்சியாளர் முடிபாகும். அச்சங்க காலத்து வாழ்ந்த நக்கீரர் இயற்றிய முருகாற்றுப் படை யில் சிவஞான போதம் கூறும் சைவசித்தாந்தக் கருத்துக் கள் செறிந்துள்ளன என்பது வியப்பைத் தருவதாயினும் உண்மையாகும் 'இல்லது வாராது' என்ற சற்காரிய முறை யைக்கைக்கொள்ளும் நாம்,சங்கநூல்கள் முதலியநூல்களில் இலைமறைகாய் போல் மறைந்திருந்த கருத்துக்களே பிற் காலத்துச் சிவஞான போதமாகத் திருந்திய வடிவில் வெளி வந்தது என்று கொள்வது பொருத்தமுடையதேயாகும்.

இறை, உயிர், கட்டு என்ற முப்பொருள்கள் உண்டு; இறைவன் உலகமாகவும் உலகத்திற்கு வேறாகவும் உலகத் தோடுடனாகவும் இருக்கின்றான்; உயிர், இருட் கேவலநிலை, சகலநிலை, சுத்தநிலை என்ற மூன்று நிலைகளை அடைதற் குரியது. உலகப் பற்றாகிய பாசம் நீங்கினால் உயிர் இறை வனைச் சார்ந்து இன்புற்று உறையும் இயல்பினது என்பன சிவஞான போதம் முதலிய சித்தாந்த நூல்கள் கூறும் சிறந்த உண்மைகளாகும். இந்த உண்மைகளைத் தலைமை யாகக் கொண்டு விளக்க எழுந்ததே திருமுருகாற்றுப் படையெனலாம். அப்பாடலை மேலோட்டமாகப் படித்துப் பார்ப்பவர்க்கு இவ்வுண்மைகள் தோன்றுவது அருமை. நோக்கு என்னும் செய்யுள் உறுப்பமையச் செய்யப்பட்ட அப்பாடலை அந்நோக்கு நெறியறிந்து ஆழ்ந்து நோக்கு வார்க்கு எளிதில் விளங்கும்.

## 2. நோக்கு

ஆற்று வெள்ளத்தில் நீந்துவோர், நீர் செல்லும் வழியே செல்வாராயின் அவ்வெள்ளத்தின் வேகம் இவ்வள

வெனச் சரியாக அறிந்து கொள்ள இயலாது. எதிர்த்து நீந்தினல் வெள்ளத்தின் ஆற்றலை உள்ளவாறு நன்குணர முடியும். புலவர் பாடும் பாடலும் அவ்வெள்ளம் போன்றதுதான். பாடல் செல்லும் போக்கில் கருத்தைச் செலுத்திப் படித்தால் அப்பாடலின் உண்மையாற்றல் புலப்படுவதில்லை. பாக்களில் காணப்படும் ஒவ்வொரு சொற்றெடரும் ஒவ்வொரு சொல்லும் என் இங்ஙனம் அமைந்துள்ளன? என்பதை அறிய அவாவி மறித்து நுணுகி நோக்கினல் அப்பாடலின் உண்மையாற்றலும் உயர்வும் நயமும் பெறப்படும். இங்ஙனம் செய்யுளில் உள்ள அடியும் சீரும் மாத்திரையும் ஆகிய உறுப்புக்களைப் படிப்போர் நோக்கியுணருமாறு புலவன் செய்யுள் செய்யவேண்டும் எனவும், இவ்வாறு நோக்கி யுணர வைப்பதுதான், 'நோக்கு' என்று பெயர் பெறும் எனவும், ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனுர் கூறியிருக்கின்ருர்.

"மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே"
(தோல் - சேய்யுளியல்)

என்றது காண்க.

இச்சூத்திரத்திற்கு உரை வரைந்த பேராசிரியர் இதன் பொருளை விளக்க, "முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு" (அகநா - 4) என்னும் அகநானூற்றுச் செய்யுளையெடுத்துக் காட்டி அதன்கண் அமைந்த ஒவ்வொரு சொல்லும் நோக்கி யுணர்வார்க்கு எவ்வாறு சிறந்த பொருளைத் தருகின்றது என்பதைத் தம் பேரறிவு தோன்ற விரித்துள்ளார். அப்பகுதியைப் படித்தபொழுது பேராசிரியர் யோகத்திலிருந்துதான் இப்பொருளை யுணர்ந்தாரோ? என்று எண்ணநேர்ந்தது. அப்பகுதியைப் படித்த பின்னர் பிறசங்கச் செய்யுட்களும் இங்ஙனமே பொருள் நிறைந்தனவாகவும் அப்பொருளை யறியும் அறிவும் ஆற்றலும் இல்லையே என அவ்வப்போது ஏங்குவதுண்டு. ஒருநாள்,

வாக்கிற் கருணகிரி வாதவூரர் கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்திற்குச் சுந்தரனுர்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்

என்ற வெண்பாவைக் கண்டேன். புலவர் திறங்களை

அளந்தறிந்து சுவைத்த ஒரு பெரும்புலவர் பாடலிது என்பதை யுணர்ந்தேன். தொல்காப்பியரால் சொல்லப்பட்டுப் பேராசிரியரால் விளக்கப்பட்ட "நோக்கு" நக்கீரர் பாடலில் சிறந்து விளங்குவதைக் கண்டே "நோக்கிற்கு நக்கீர தேவர்" என்று இப்புலவர் சிறப்பித்திருக்க வேண்டும் என்பதை யுணர்ந்து நக்கீரர் பாடலில் நோக்கு அமைந்துள்ளமையைக் காண முயன்றேன். நக்கீரர் பாடல் பலவற்றுள்ளும் பத்துப் பாட்டுள்ளும் முதன்மைபெற்று விளங்கும் தகுதி வாய்ந்த திருமுருகாற்றுப்படையையே அவர் சிறந்த வாக்காக எடுத்துக் கொண்டு அதன்கண் 'நோக்கு' அமைந்திருப்பதைத் திருவருள் துணைகொண்டு நோக்கினேன். சிலவுண்மைகள் புலப்பட்டன. இப்பாடலில் உள்ள ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு அசையும் கூட நோக்கி யுணரவல்லார்க்கு நயப்பொருள் பயக்கும் தன்மையன. என் சிற்றறிவிற்கு எட்டிய அளவில் நோக்கி ஆராய்ந்தபொழுது திருமுருகாற்றுப்படையில் சைவ சித்தாந்த உண்மைகளே விளங்கக் கண்டேன். கண்டவற்றை இங்குத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

## 3. ஆற்றுப் படுத்துமுறை

எழுத்தும் சொல்லும் பொருளும் இயைபுற ஆய்ந்து முதனூற் பொருளை முற்றுற வுணர்ந்த முதுபெரும் புலவர் ஒருவர், நில்லா உலகம் புல்லிய நெறித்து என உலகியலை உவர்த்துப் பேராவின்பப் பெருவாழ்வை விரும்பி அதை யெளிதில் எய்து நெறியாது என நல்லோர் பலரை நாடி வினவிப் பற்பல விடங்களில் பரந்து திரிகின்றார். ஒருநாள், சேயோன் சேவடிதைவரு சிந்தையும் அவன் புகழ் வழுத்தும் வாயும் அவனை வணங்குந் தலையும் உடைய சீவன் முத்தராம் பெருப்புலவர் ஒருவரை, நல்வினை வயத்தால் ஓரிடத்தில் காண்கின்றார். அப்பெரும்புலவரின் திருமுக ஒளியே முருகன் திருவருளை முழுதுறப் பெற்ற தன்மையை நன்கு விளக்குகின்றது. புலவர் அண்மையிற் செல்கின்றார். வணங்குகின்றார். சேயோன் சேவடிப் பேற்றை எளிதில் எய்தும் நெறி யாதென வினவுகின்றார். அச்சேவடிப் பேற்றை இம்மையிலேயே எய்திய அச்சீவன்முத்தர், அப்புலவருடைய பக்குவ நிலையினையும் அயரா அன்பினையும்

நுனித்துணர்ந்து, முருகன் திருவடிப் பேருகிய வீட்டின் பத்தை யடைதற்குரிய இடங்களையும் அவ்விடங்களில் அம் முருகப்பெருமான் இருக்கும் நிலைகளையும் அப்பெருமானை வழிபடும் அடியவர் நிலைகளையும் வகுத்தும் விரித்தும் கூறி இவ்விடங்களில் யாண்டாயினும் அவ்வாண்டவன் அருளைப் பெறலாம்" என்று செவியறிவுறுத்தி ஆற்றுப்படுத்துகின் றார் செந்தமிழ்ப் புலவராம் சீவன்முத்தர்.

இவ்வாறு வீடுபெற விழைந்த புலவர்க்கு வீடுபெற்ற விழுமியபுலவர் அவ்வீட்டைப் பெறுநெறி தெரிப்பதே திரு முருகாற்றுப்படையென்னும் பெருநெறிப் பாடல் என்க. நிலைபேறில்லாச் செல்வப் பொருளைப்பெறும் பொருட்டுப் புரவலர்பால் இரவலரை யாற்றுப்படுத்தும் பொருநராற்றுப் படை முதலிய பாடல்களிலும், நிலைபேறுடைய பேரின்ப வீடுதரும் திருமுருகப் பெருமான்பால் புலவரை ஆற்றுப் படுத்தும் இம்முருகாற்றுப்படை சிறந்து காட்டுதலின் பத்துப்பாட்டில் முதலிடம் பெற்றது. வீடு விரும்பும் புல வரை முருகன்பால் ஆற்றுப்படுத்தலைக் கூறுவதால் இப் பாடல் " புலவராற்றுப்படை " என்று பெயர் பெறுவதே முறை. புறப்பொருள் வெண்பாமாலையினும் இத்தகைய ஆற்றுப் படைக்குப் ' புலவராற்றுப்படை ' என்றே துறை வகுக்கப்பட்டுளது. ஆயினும் இப்பாடலில் அமைந்த " முருகாற்றுப்படுத்த உருகெழுவியனகர் " (244 - அடி) என்பதிலுள்ள " முருகாற்றுப் படுத்தல் " என்னும் சிறந்த தொடர்மொழியால் " முருகாற்றுப்படை " எனப் பெயர் பெற்றது. " கூத்தராற்றுப்படை" என்று பெயர் பெறு வதற்குரிய பத்துப்பாட்டில் இறுதிப்பாட்டு " மலைபடு கடாம் " என அப்பாடலிலுள்ள சிறந்த தொடர்மொழி காரணமாகப் பெயர்பெற்றிருத்தலும் காண்க.

## 4. முருகாற்றுப்படை ஆறுவகையாகப் பகுக்கப்பட்டது ஏன்?

முருகனுடைய ஆறுபடை வீடுகளைக் கூறுகின்ற பகுதி களை விளக்கவே அறுவகையாகப் பகுக்கப்பட்டுள்ளது என்பதே பெரும்பாலோர் நம்பிக்கை. படைவீடு என்பது படைகள் தங்கிய இடம் என்னும் பொருளது. கந்தபுரா ணக் கதையை நோக்கும்பொழுது முருகன் திருச்செந் தூரில்தான் படையொடு தங்கியிருந்தான் எனக் கூறப்

பட்டுளது. படைவீடு என்ற பெயருக்கு அத்தலம் தகுதியுடையதாகலாம். ஏனைத் திருப்பரங்குன்றம் திருவாவினன் குடி திருவேரகம் என்ற தலங்களுக்கு அப்பெயர் பொருந்துவதாயில்லை. குன்றுதோறாடல் ஒருதலமாகாது என்பது வெளிப்படை. பழமுதிர்சோலை மலை என்பது குறிஞ்சிக் கிழவன் என்ற பொருள்பட வந்த மலைகிழவோன் என்ற பெயர்க்குப் பழம் உதிர்சோலை என்பது அடையாக நின்றதன்றி ஒரு தலத்தைக் குறிக்கவில்லை எனலாம். "சேயோன் மேய மைவரை யுலகம்" எனத் தொல்காப்பியர் மலைகளை முருகனுக்கு உரியவாகக் கூறியிருத்தல் காண்க. மேலும் பழமுதிர் சோலையைக் குறிப்பிடும் பகுதியில் காடுங் காவும் கவின்பெறு துருத்தியும் யாறுங் குளனும் முதலிய பலவாக எண்ணப்பட்ட இடங்களில் எல்லாம் முருகன் இருப்பதாகக் கூறியுள்ளார். ஆறுபடைவீடு என்ற வரையறைக்கு இவ்விடங்கள் அடங்காமல் போதலையும் ஓர்க. நச்சினார்க்கினியரும், குன்றுதோறாடலையும் பழமுதிர் சோலையையும் தலங்களாக எண்ணவில்லை என்பதையும் நினைக்க. நாவலர் பண்டித. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களும் தமது 'நக்கீரர்' என்ற நூலில் ஆறுபடை வீடுகள் என்பது பொருந்தாதென்பதை விளக்கியுள்ளமை காண்க.

ஆறுபடைவீடு என்பது பொருந்தாதாயின் இப்பாடல் அறுவகையாகப் பகுக்கப்பட்டதற்கு வேறு காரணந்தான் யாதோ? என்னின், கூறுவல். இறைவன் ஐம்பூதங்களாகவுள்ளான் என்பதை யுணர்த்தும் தில்லை, காளத்தி, அண்ணாமலை, ஆனைக்கா, காஞ்சி என்னும் ஐந்து தலங்கள் இருத்தல் போல; இறைவன் உலகமாய், வேறாய் உடனாய் நிற்கும் நிலைகளை யுணர்த்தும் தலங்கள் மூன்று உண்டு என்பதைக் காட்டுகின்றன. முருகாற்றுப்படையின் முதல் மூன்று பகுதிகள், பின் மூன்று பகுதிகள், இறைவனை அம்மூவகை நிலையில் வைத்து வழிபடும் அடியவர்களைப் பற்றிக் கூறும் பகுதிகளாகும்.

வீடுபேற்றை விரும்பிய புலவருக்கு அவ்வீடு பெறும் நெறியைக் கூறும் புலவர், முதற்கண் விளக்க வேண்டியது முருகப்பெருமானுடைய இயல்பேயாகும். அவ்விறைவன் இயல்பு; உலகமே யாதலும், வேறாதலும், உலகமோடுடனாதலும் என மூவகையாகவுளது. உலகத்தொடர்பற்றுத்

தனித்திருக்கும் நிலையைப் 'பரநிலை' எனவும் உலகமே உருவாய் நிற்கும் நிலையைப் 'பருநிலை' எனவும் உலகமும் தானுமாக நிற்கும் நிலையை 'உடனிலை' எனவும் கொள்ளலாம். இம்மூவகைப்பட்ட முருகன் இயல்புகளை யுணர்ந்த புலவர், இம்மூவகை நிலையில் அவ்விறைவனை வழிபட்ட அடியார் இயல்புகளையும் அறிய விரும்புவது இயற்கை. எனவே இறைவனது மூவகையியல்புகளையும் அடியார்களின் மூவகையியல்புகளையும் உணர்த்துகின்ற இப்பாடல் இக்காரணத்தால் அறுவகையாகப் பகுக்கப்படுகின்றது என்பதே பொருத்தமாகும்.

இறைவனது பரநிலையைத் திருப்பரங் குன்றத்திலும், பருநிலையைத் திருச்சீரலைவாயிலும், அவன் உடனிலையைத் திருவாவிநன்குடியிலும் உணர்த்தி, அவனை அம்மூவகையில் வைத்து வழிபடும் அடியார்கள் மூவகையினரையும் முறையே திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்ற மூன்று பகுதிகளில் வைத்து உணர்த்துகின்றார். வீடு விரும்பும் புலவனுக்கு இங்ஙனம் முறைப்படுத்திக் கூறினால் அவன் தகுதிக்கேற்ப விரும்பிய இடத்தில் அம் முருகனை வழிபட்டு வீடுபெறுவானாக என்பது சீவன்முத்தராம் செந்தமிழ்ப் புலவரின் நினைவு. தாம் வீடுபெற்ற பின்னர் அவனருளே கண்ணாகக் காண்கின்றார் ஆதலின் அவ்விறைவன் நிலைகளையெல்லாம் எளிதில் அறியப்பெற்றார். அவ்வருள்நிலை அப்புலவனுக்கு இன்னும் எய்தவில்லையாதலின் இவ்வாறு பல்வகை நிலையினையும் பகரவேண்டியதாயிற்று.

## 5. முருகன் திருவுருவம்

முதற்கண் முருகப்பெருமானது திருவுருவத்தைப் பொதுவகையாற் புலவருக்கு எடுத்துரைக்கின்றார் பெரும் புலவர். சேய்மையில் நின்றும் அண்மையிற் செல்வோன் முதலில் காணத்தக்கதாக இருப்பது வடிவத்தின் ஒளியேயாதலின் அதனையே முன்னர் விளக்கியிருக்கின்றார்.

"உலகமுவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்"

என்கின்றார். உலகத்துயிர்கள் உறக்கத்தினின்று எழுந்து மகிழ்ச்சியுறச் செய்வது ஞாயிறு. விண்ணில் விளங்கி வலமாகச் சுழன்றுகொண்டிருப்பது ஞாயிறு. வேறு பட்ட பல சமயத்தவர்களாலும் புகழப்படும் பெருமை வாய்ந்தது ஞாயிறு. அத்தகைய செஞ்ஞாயிறு காலையில் கடலில் தோன்றுங் காட்சி தனிச்சிறப்புடையது. பசுமை யான மயில் மேல் செந்நிற ஒளியோடு விளங்கும் முருகப் பெருமானுக்கு அக்கடல் மிசைத்தோன்றும் இளவள ஞாயிறே பொருந்திய உவமையாகும். ஞாயிறு புறவிரு ளைப் போக்குவதுபோல முருகன் தன்னை வழிபடும் உயிர் களின் அகவிருளைப் போக்குவதாலும், செந்நிறம் இருவர்க் கும் பொதுவாதலானும், நீலப்பறவைக்கு நீலக்கடல் பொருந்திய உவமையாதலானும், ஞாயிறு உலகப் பொருள் களைத் தன்னொளியால் விளக்குதல்போல முருகன் உண் மைப் பொருளை அடியவர்க்கு அறிவிப்பதாலும் சிறந்த உவமையாதல் காண்க. இறைவனுக்கும் ஞாயிற்றுக்கும் இத்தகைய ஒற்றுமையிருத்தலால் மெய்கண்ட தேவநாய னாரும் பலவிடங்களில் இஞ்ஞாயிற்றையே இறைவனுக்கு உவமை கூறியிருக்கின்றார் என்பது உளங்கொளற்குரியது.

அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க் கீசன்—அருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்தும் தாமரைபோல்
நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர். (சிவஞானபோதம் - 70)

என்ற பாடலைக் காண்க.

இனி அம்முருகனுடைய ஒளி, ஞாயிற்றின் ஒளியைப் போலக் காலம் பாராது எக்காலத்தும் ஒழிவற விளங்கும் சிறப்புடையதாகக் காணப்படுகின்றது. வேறு பொறி களில் செல்லாது மனத்தைத் தன் வழிப்படுத்தும் தன்மை யும் எழிலும் ததும்புகின்றதாம் அவ்வொளியில். இங்ஙனம் சேய்மையில் ஒளிவடிவாகப் பொதுவகையான் கண்ட புலவர், அண்மையிற் சென்று கீழிருந்து மேல் நோக்குவ ராயின் முதலில் தோன்றுவது திருவடியேயாதலின் அத் திருவடியின் சிறப்பை முன்னர் விளக்கியுள்ளார். மேலும் சேவடி விரும்பிச் செல்லும் புலவர்க்கு முன்னர் அறிவிப்ப தற்குரியதும் அதுவே யாதல் காண்க.

இனி, அத்திருவடி, புலவர் எண்ணத்திற்கு ஏற்ற தகுதிப்பாடுடையது என்பதையே விளக்க வேண்டுமாதலின், "உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்" என்று கூறியுள்ளார். தன்னை அடைந்தவர்கள் தீவினையைப் போக்கி அவரைத் தாங்கும் பொருட்டு அறியாமையை உடைத்தற்குக் காரணமாகிய வலியினையுடைய திருவடி, என்பது பொருள். இதனால் அருளால் கூறினார். இன்னும் சிறிது மேல் நோக்கின் அம்முருகப் பெருமானுடைய கைகள் தோற்றமளிக்குமன்றோ? அக்கைகள், (செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை) அழித்தற்குரியாரை அழித்த கைகள் எனக்கூறி இறைவனது தெறல் தன்மையை விளக்குகின்றார். அல்லோரை அடக்கி நல்லோரைக் காத்தற் பொருட்டும் அந்த அல்லோரையே நல்லோராக மாற்றுதற் பொருட்டும் ஆகலின் அருளிறைக்குத் தெறலும் வேண்டியதாயிற்று.

கையை நோக்கிய புலவர் அக்கையைச் சார்ந்துள்ள உருவத்தையும் காணுதல் இயற்கையே. அவ்வுருவந்தான் வள்ளிநாயகியார் உருவம். எனவே அவ்வுருவத்தையும் சேர்த்து, "வாணுதல் கணவன்" என்ற பெயரால் குறிப்பிடுகின்றார். அருள்பெற விழையும் புலவர்க்கு அருட்சத்தியோடுகூடிய உருவமே அறிவித்தற்குரிய தகுதியுடையதாதல் காண்க. இங்கு "மறுவில் கற்பின்" என்றதால் வள்ளியம்மையாரின் அக அழகையும் 'வாணுதல்' என்றதால் அவர் அக அழகால் பொலிவுறும் முக அழகையும் பெறவைத்துள்ளார். முருகனையே நோக்க விரும்பும் புலவன் மீண்டும் அம்முருகனை நோக்குதலே முறையாகலின், அம்முருகனது கடப்ப மாலையணிந்த மார்பினை அறிவிக்கின்றார். அக்கடப்ப மாலை எக்காலத்து எவ்விடத்துப் பூத்தது என்பதும் விளக்கப்படுகின்றது. கடலில் நீர்முகந்த மேகம் விண்ணில் பரவிப் பெய்த முதன் மழையிலேயே தண்ணிதாய காட்டில் தழைத்த கடம்ப மரத்தில் பூத்த பூவைக் கொண்டு செய்யப்பட்ட மாலையாம் அது. இக்கடப்பமாலை போகத்திற்குரிய மாலையாகும். மாயடிகளாகிய திருமாலுக்குரிய முல்லை நிலத்தில் பூத்த கடப்பமாலையைப் போகத்திற்குரிய மாலையாகக் கொள்வது எவ்வளவு பொருத்தமாக வுள்ளது காண்மின்! மாலையை நோக்கிய பின்னர் இன்னும் சிறிது

மேல் நோக்கின் முருகன் சென்னி காணப்படும் அன்றே ? அச்சென்னியில் மிளிர்வது யாது ? அதுதான் முருகனுக்கு அடையாளப் பூவாகிய காந்தள்மலர்க்கண்ணி. குறிஞ்சி நிலத்தில் பூத்ததாய்ச் செந்நிறத்ததாய் ஆறு இதழ்களை யுடைய அக்காந்தள் மலர், குறிஞ்சிக் கிழவனுய்ச் செந்நிற மும் ஆறுமுகமும் உடைய முருகனுக்கு அடையாளப் பூவாதல் சாலப்பொருத்தமாதல் காண்க.

"சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்"

என்று காந்தட்கண்ணி அணிந்த சென்னியை அறிவிக்கின் றார். இவ்வாறு அடிமுதல் முடிகாறும் முருகனுடைய எழிலை அறிவித்த புலவர், முருகனுடைய உறுப்பிற்கு வேறாய்க் கையில் விளங்கும் வேற்படையைப் பின்னர் அறிவிக்கின்றார். அவ்வேலால் செய்த வீரச் செயல்களையும் குறிப்பிட்டு அவ்வேலினை யேந்திய சேயோனைப் புலவர்க்கு அறிமுகப்படுத்தி யிருக்கின்றார். காணவியலாத பொருளைக் கண்டு காட்டும் புலவர், ஓவியம் வரைந்து காட்டுவதுபோல, முருகப்பெருமானுடைய ஒளியுருவத்தை முன்னர் விளக்கிப் பின்னர்த் திருவடி, திருக்கை, திருமார்பு, திருமுடி ஆகிய அவயவங்களையும் வேலினையும் இயற்கை வழாது எடுத்துக் காட்டிச் செல்வது கால அழகிதாகக் காணப்படுகின்றது. இங்ஙனம் முருகனுடைய திருவுருவத்தைக் கூறுமுகத்தால் தாம் பின்னர் விரித்துக்கூற எண்ணிய அம்முருகப் பெருமா னின் மூவகை யியல்புகளையும் குறிப்பில் பெறவைத்துள் ளார். எவ்வாறு எனின் ? கூறுவல்.

முருகனுடைய எழிலைப் பொதுவகையான் உணர்த்த வந்த புலவர், "வாணுதல் கணவன், தார்புரளு மார்பினன், கண்ணிமிலைந்த சென்னியன் ஆய செவ்வேற்சேய்" என்று குறிப்பிட்டிருக்கின்றார். 'வாணுதல் கணவன்' என்றது, சத்தியும் தானுமாய் இறைவன் இருக்கும் நிலையினைக் குறிப் பிட்டவாறு "சர்வம் சத்திமயம் சகத்து" என்பவாகலின் சத்தியும் தானுமாய் இருக்கின்றான். எனவே உலகமோடு உடனாய் நிற்கும் நிலையினை யுணர்த்திய வாறாயிற்று. "மராஅத்துருள் பூந்தண்டார் புரளுமார்பினன்" என உலக போகத்திற்குரிய மாலையணிந்த மார்பினைக் கூறிய தால் உலகமே யுருவாய பருநிலையைக் குறிப்பிட்டவாறு,

"மந்தியு மறியா மரம்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்"

என்றதால் மனத்திற்கெட்டாத பரநிலையைக் குறிப்பான் உணர்த்தியவாறு. காந்தளங்கண்ணி, சுரும்பு மூசாச் சுடர்ப் பூங் காந்தள் எனப்படுவதும், அது உயர்ந்த மலையிலுள்ளது என்பதும், அம்மலைதானும் மந்தியும் அறியா மரம் பயின்றது என்பதும், அப்பரநிலையின் அருமையினை ஒப்புமையான் புலப் படுத்துவதாகும். மேலும் உருவத்தின் மேலிடத்திலிருக்கும் சென்னியைக் குறிப்பிட்டதால் இறைவன் மூவகை நிலை யில் மேலானதாகிய பரநிலையை நன்குணர்த்துதல் காண்க.

கணவன், மார்பினன், சென்னியன் என்ற முப்பெயர் களும், 'செவ்வேற்சேய்' எனப் பின்வரும் பெயர்க்கு அடையாய் அடுக்கி நின்றனவாகலின் இம் மூவகை நிலை யினையும் உடையவன் செவ்வேற் சேயே என்பது பெற வைத்தவாறு. இப்பெயரும் 'செவ்' எனவும், 'வேல்' என வும், 'சேய்' எனவும் பிரிந்து மூன்று சொற்களாகும் தன்மையதாய் அமைந்து அம்மூவகை நிலையினையும் குறிப் பினுள் குறிப்பாய்ப் பெறவைத்த நுட்பம் அறிந்து மகிழ்தற் குரியது. செம்மை பரநிலையினையும் சத்திவேல் பருநிலையினை யும் அவற்றையுடைய சேய் உடனிலையையும் உணர்த்துதல் காணலாம். சேய் என்றது செந்நிறமுடைய முருகன் என்று பொருள்படுஞ் சொல்லாதல் காண்க.

## 6. சூரர மகளிர்

இனிக் காந்தட்கண்ணியைக் கூறுமுகத்தான் சூரர மகளிரையும், வேலைக் கூறு முகத்தான் பேய்ப் பெண்டினை யும் இயைபுபடுத்திக் கூறியிருக்கும் மாண்பு பெருவியப் பைத் தருவதொன்றாகும். ஒன்றோடொன்று ஒவ்வாது முரண்பட்ட இரண்டு காட்சிகளை ஓரிடத்தில் ஒன்றன்பின் ஒன்றாக எடுத்துக்காட்டி மகிழ்விக்கின்றார். சுரும்பு மூசாச் சுடர்ப் பூங்காந்தள் யாண்டுப் பூத்தது என்பதை அறிவிக்க வந்த புலவர், கோடுவாழ் குரங்கும் ஏறியறியாத உயர்ந்த மரங்கள் நெருங்கிய மலையின் சிறப்பை யறிவித்தார். அம் மலையும் சோலையால் சூழப்பட்டுளது என்பதை விளக்கி, அச்சோலை தானும் சூர்அர மகளிர் ஆடும் சோலை என அறி விக்கின்றார். அச்சூரர மகளிர் எவ்வியல்பினர்? அவர் பாட

லும் ஆடலும் என்ன ? என்பவற்றை இம்முறையால் சங்கிலிபோல ஒன்றற்கொன்று இயைபுடையதாகச் சிறப்பித்திருக்கின்ருர்.

தெய்வ மங்கையர், தம்மழகால் கண்டார்க்கு அச்சம் விளேவித்தலின் " சூர் அரமகளிர் " எனப்பட்டார். (சூர் - அச்சம். அரமகளிர்-தெய்வமகளிர்.) இவர்களுடைய எழிலே அடிமுதல் முடிவரை ஓவியம் வரைந்து காட்டுவதுபோல் முறை முறையே எழிலுற இயம்புகின்ருர். முதலில் ஒண் செஞ் சீறடியைக் காட்டுகின்ருர். அடி சிறுத்திருப்பது பெண்டிர்க்கு அழகு ; ஆகலின், 'சீறடி' என அரமகளிரின் அழகு மிகுதியை விளக்கினர். அவ்வடிகள் சிறியவாக இருப்பதோடு சிவந்து ஒளியுடையவாய்க் காணப்படுகின்றன. இயற்கை எழில் மிக்க அவ்வடிகளில் செயற்கையழகும் பொலியக் கிண்கிணி அணியப் பெற்றுள்ளன. அடிகளுக்குமேலிருக்கும் கணேக்கால் திரண்டு அழகுடன் விளங்குகின்றது. இடை மென்மையால் நுடங்கி வளேந்து காணப்படுகின்றது. தோள்கள் திரண்டு மூங்கில்போல வனப்பும் வழவழப்பும் உடையவாகக் காணப்படுகின்றன. அவர்கள் உடுத்துக்கொண்டுள்ள ஆடை இந்திர கோபப் பூச்சியைப்போன்று சிவந்து பளபளப்புடன் காணப்படுகின்றது. இவ்வாடைக்கு இவ்வளவு அழகான சிவப்பு நிறம் செயற்கையால் ஊட்டப்பட்டதன்று ; தெய்வத்தின் ஆணேயால் இயற்கையாகவே சிவந்திருக்கின்றதாம். பூத்தொழில்கூடச் செய்யப்பெற்றுள்ளதாம். அவ்வாடைக்குள் அல்குற் புறத்தணிந்த பல மணிகளேக் கோத்த மேகலே ஒளியும் ஒலியும் செய்துகொண் டிருக்கின்றது. ஓவியம் வல்லானும் கையால் புனேந்து இயற்றமுடியாத அவ்வளவு அழகு அவர்கட்கு இயற்கையாகவே அமைந்துளது. மானிட மகளிர்க்குத் தாயர் பலரும் கைசெய்வதால் அன்றே அழகு உண்டாவது ? இத்தெய்வ மகளிர்க்கு அங்ஙனமின்றித் தெய்வத்தன்மையால் இயற்கையாகவே பேரழகு அமைந்துளது. இயற்கையான அழகினுக்கு அழகு செய்வார்போலச் சாம்பூநதம் என்னும் உயர்ந்த பொன்ஞல் செய்யப்பட்ட அழகிய ஒளிவாய்ந்த ஆபரணங்களே அணிந்துள்ளார்கள். அவர்களின் குற்றமற்ற மேனி ஒளி, மிக நெடுந் தொலேவிலும் சென்று விளங்குகின்றது.

அவர்கள் தலையில் அமைந்த கூந்தல், கடையொத்து நெய்ப்புத்தன்மை யுடையதாகக் காணப்படுகின்றது. இங்ஙனம் இயற்கையாக அமைந்த அக்கூந்தலினை அழகுசெய்ய வந்த ஆயமகளிர் 'இக்கூந்தலே கூந்தல் பலவற்றுள்ளும் சிறந்தது' என ஆய்ந்து முடிவுகட்டி யிருக்கின்றார்கள். அவ்வளவு அழகான கூந்தலிலே அத்தெய்வ மங்கையர் தம் செம்மேனிக்கும் செந்நிற ஆடைக்கும் ஏற்றதாகச் சிவந்த காம்பினையுடைய வெட்சியின் சிறிய பூக்களை விடுபூவாக அமைத்துத் தைத்து அப்பூக்கட்கு நடுவே பசுந்தண்டினை யுடைய குவளையினது தூய இதழ்களைக் கிள்ளி யிடுகின்றார்கள். சீதேவி யென்னும் தலைக்கோலத்தையும், வலம்புரி வடிவாகச் செய்த தலைக்கோலத்தையும் வைத்தற்குரிய இடங்களில் வைத்து அழகு செய்கின்றார்கள். திலகம் இட்ட நறுமணம் வீசும் அழகிய நெற்றியில் வந்து தாழுமாறு சுறாமீனின் வாயாகச் செய்த தலைக்கோலத்தைத் தொங்கச் செய்கின்றார்கள். வேண்டிய மணப் பொருள்களைக் கூட்டி முற்ற முடித்த குற்றமற்ற கொண்டையில், பெரிய குளிர்ந்த சண்பகப்பூவைச் செருகுகின்றார்கள். அதன் நடுவில் கரிய புறவிதழையும் துய்யினையுமுடைய மருதப் பூங்கொத்துக்களை இடுகின்றார்கள். அந்த உச்சிக் கொண்டையின் மேல் பச்சென்ற சுரும்புகளினின்றும் மேலே வந்து அழகுபெற்றுத் தோன்றுகின்ற நீர்க்கீழ் நின்று சிவந்த அரும்புகளைக் கொண்டு இணையாகக் கட்டிய மாலையை வளைய வைத்துக் கொள்கின்றார்கள். வளம் வாய்ந்த இரு காதிலும் ஒத்த அளவினவாகத் தொங்கவிட்ட அசோகத்தினது ஒளிவாய்ந்த தளிர்கள், நுட்பமான வேலைப்பாடமைந்த அணிகள் நிறைந்த மார்பில் வந்து அசைகின்றன. திண்ணிய வயிரமான நறுமணமிக்க சந்தனக்கட்டையைத் தேய்த்து உண்டாக்கிய பொலிவுவாய்ந்த நிறத்தினையுடைய சந்தனக் குழம்பைக் கோங்கு அரும்பு போன்று குவிந்துள்ள கொங்கைகளில் அப்பிக்கொள்கின்றார்கள். அக்குழம்பு, மணங் கமழ்கின்ற மருதப்பூவை அப்பினாற்போலக் காணப்படுகின்றது. அக்குழம்பு ஈரம் புலர்வதற்குமுன் விரிந்த வேங்கைப் பூவினது நுண்ணிய மகரந்தப்பொடியை அக்குழம்பிற்குமேல் அழகு பொருந்த அப்பிக் கொள்கின்றார்கள்.

(தொடரும்)

# சைவ சித்தாந்த மகா சமாஜம்,

# பொன்விழா மலர்

மிக மிகக் கவர்ச்சியான வெளியீடு. இதில் ஐம்பத்தொரு கட்டுரைகள் உள்ளன. சமாஜத்தின் ஐம்பது ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் தெளிவாக எழுதப் பெற்றுள்ளன. ஐம்பதாண்டுகளில் நடந்த நிறைவு விழாக்களின் தலைவர்கள் ; நடைபெற்றஇடங்கள்; மங்கையர் மாநாடு, இளைஞர் மாநாட்டு விவரங்கள் ; சமாஜத் தொண்டர்கள் தொண்ணூற்றொருவர் பற்றிய குறிப்புக்கள்; உயர்திருவாளர்கள்: ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகள்,ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை,ஸர். பொன்னம்பலம் இராமநாதன்,பொன்விழாத்தலைவர் கனம்சு. நடேசப்பிள்ளை, திரு.வி.க. முதலிய முப்பதின்மர் உருவப்படங்கள் ; வேறு பற்பல சிறப்புக்கள் இதில் மிளிர்கின்றன. கட்டுரையாளர்களுள் டாக்டர் அ.சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் வ. ஆ. தேவசேனபதி, தணிகைமணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராயப் பிள்ளை, சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியார், சித்தாந்த ரத்நாகரம் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், திரு. அ. மு. பரமசிவானந்தம் முதலியோர் உள்ளனர். இருநூற்று நாற்பது பக்கங் கொண்ட அழகிய பதிப்பு.

விலை ரூபா ஒன்று. ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா பன்னிரண்டு. உடனே முன்பணம் அனுப்பிப் பெற்றுக்கொள்க. வி. பி. மூலம் அனுப்பப்படமாட்டாது.

கிடைக்கும் இடம் :

**பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை—1.**

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V.K. Punithavathi. Edited by C M Ramachandran Chettiar, B.A., B.L., and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 2. Seetha Rama Nagar, Cuddalore N. T.